# மின்னூல் வெளியீடு

*மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com*

*அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com*

*மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com*

*மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation*

# Ebook Publication

*Ebook Publisher: http://freetamilebooks.com*

*Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com*

*Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com*

*Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation*

# பொருளடக்கம்

# முகவுரை

கவிதைச்சாரல் என்று பெயர்சூட்டப்பட்ட இந்நூல் எனது முதல் கவிதை தொகுப்பு நூலாகும்.இன்றைய நிலையில் கவிதை என்பது காற்றைப்போல விரிவடைந்துவிட்டது,என்றாலும் கூட பெரும்பாலானோர் காதல் கவிதைகளுக்கு கொடுக்கும் முக்கியத்துவத்தை பிறவற்றிற்கு கொடுப்பதில் தயக்கம் காட்டுகின்றனர்.இன்னும் சிலர் தங்கள் கவித்திறத்தையே காதல் கவிதையினாலே கண்டுபிடிக்க வேண்டிய நிலை உள்ளது.இத்தகைய சூழலில் காதலைத்தவிர்த்த பலக்களங்களை முதன்மையாகக்கொண்டு இயற்றப்பட்ட கவிதைகளின் தொகுப்பே இக்‘**கவிதைச்சாரல்**’.

வைரபாரதி

# ஆசிரியர் உரை

படபடக்கும் பட்டாசு சத்தம், ஓயாது வேலை கொடுக்கும் செவிகளுக்கு.காற்றில் சேர்ந்துவரும் அச்சுமை வாசம் நாசியோடு கதைகள் பேசிடும்.இவ்வாறு பட்டாசாகிய புத்தகங்களின் பிறப்பிடமான சிவகாசியே பூர்வீகம்.இயற்பெயர் சு.ஆர்த்திமா,இளங்கலை வேதியியல் படிக்கும் இளமங்கை.பாரதியாரின்ஆளுமையால் கவரப்பட்டு வைரமுத்து அவர்களின் வைரவரிகளால் களவாடப்பட்டு சமீபத்தில் யுகபாரதி அவர்களை பின்பற்ற தொடங்கியமையால் வைரபாரதி என்னும் புனைபெயரில் தொடங்கியுள்ளது இக்கவிப்பயனம்.வைரபாரதியின் கவிதை வரிகள் நிச்சயம் தங்கள் மனதில் அழியா வரிகளாகவும் வாழ்க்கை வரிகளாகவும் அமையுமென்ற நம்பிக்கையில் இம்முதல் பதிப்பு கவிதைச்சாரல்.தங்கள் நல்லாதரவை வேண்டுகிறேன்.

# 1. கவிக்கரு

எண்ணங்கள் எழுகின்ற இடங்களில்..

கவிதைகள் எழுவதில்லை..

கவிதைகள் எழுகின்ற

இடங்களில்..

காதலை விடுத்து

வேறேதும் தோன்றுவதில்லை..

பிழை கவியெலும் மொழியிலா..

கருவாக காத்திருக்கும் காதலிலா..

## 2. நிலையற்ற மனம்

*நீலத்திரைக்கடலே..*

*நித்திரை தொலைத்து..*

*நின் மடியில் தலைசாய்த்துரங்க..*

*நீலவானம் ஏங்கி நிற்க..*

*நினைவலைகள் மனம் வருடுகிறது*

*நிதானமாய்..*

## 3. காற்றோடு கதைக்கும்..

அடம்பிடித்து அசைந்தாடும்

பிள்ளையாய்..

அனுதினமும் அசைந்தாடி

தன்னை இடுப்பில் ஏற்றிக்கொள்ள

அழைக்கிறது..

சலசலக்கும் ஒலியோடு மரக்கிளைகள் ..

விண்ணில் தொலைத்த

தன் தாயை நோக்கியபடி..

# 4. சிகப்பு ரோசா

புதிதாய் உதித்த ரோஜா மொட்டு

நாளை மலர்ந்திடும் வாசனைப் பட்டு..

மகரந்தத்தை ருசிப் பார்க்க வண்டு கூட்டம் ரீங்காரம் செய்ய..

மலரும் நாளை தள்ளி வைத்து

காத்திருந்தது..

பொறுமையற்று வேறு மலரை வண்டுகள் நாடிச்செல்ல..

துள்ளிக்குதித்து இதழ் விரித்து

மலர்ந்தது..

காக்கைக்கு அஞ்சி கழுகிடம் சிக்கியது போல்..

மலர்ந்த நோடியில் உயிருடன்

வெட்டப்பட்டது..

சுயநல மனிதனின் கேசத்தில்

சிரிப்பது போன்ற நடிப்பிற்காக..

## 5. தன்னலமற்றவள்

தலைமுடி முதல் கால் நகம் வரை

நீ கொண்ட இன்பம் அவள் மீது

வழியாய் சிதற..அதனை

சுகமாய் அடிவயிற்றில் சேமித்து..

உண்ணாமல் உறங்காமல் சுமந்து..

உன்போல் ஒருயிரை..

உன் கையில் கொடுக்கும்

ஒருயிர் பெண்..

## 6. பேடி

பிறப்பால் உயர்வில்லை..

பிறப்பால் தாழ்வுமில்லை..

எனில்..

பிறப்பால்

ஆணின்றி பெண்ணின்றி..

ஆண்பெண்ணானவரை

மனிதராக மட்டுமன்றி

ஓர்உயிராகக்கூட மதிக்க மறப்பதேனோ..

## 7. நீயின்றி வாழ்தல் கூடுமோ..

*என்னருந்தேனே..*

*இனிய தெள்ளமுதே..*

*எம் தமிழே..*

*நீயின்றி யாம் வாழ்ந்திடுவோமோ..*

*புல்லாங்குழல் வழி செல்லும் காற்று..*

*இசையாதல் போல்..*

*எம்முடலுள் சென்று உயிரோடு கலந்து.. ஒலியாய் வெளிவரும் நீ..*

*வெறும் மொழிதானோ?*

*எம் உணர்வல்ல நீ..*

*விரல் நுனி சிந்திடும் பலமுத்துகளை..*

*நாவின் நுனி கொட்டிடும் பல முத்துக்களை..*

எத்தனை முத்துக்கள் பிறப்பினும்..

அதைக்காத்து வைத்த வைரச்சிப்பியடடி நீ..

எம் தமிழே..

காற்றோடு நீ சோற்றோடு நீ

காவியத்தில் நீ கோவிலுள் நீ..

கடலுள் நீ கடல் தாண்டி செல்லின்..

அங்கே இருக்கும் கொடிகளிலும் நீ..

தமிழன் மட்டுமல்லாது உலகோர் வியக்கும்

உயர் அதிசயம்

உலக அதிசயம் நீ..

உன்னாள் உயிர் கொண்டு..

உயிர் போயின் உனக்கே

உடல் கொடுத்து பழகிய யாம்

நீயின்றி வாழ்தல் கூடுமோ..

எம் தமிழே நீயிருக்க

எம் நிழலும் தரையில் வீழுமோ?

## 8. தாலாட்டு

ஒரு நாள் மட்டுமல்ல..

ஒரு மாதம் மட்டுமல்ல..

ஒரு வருடம் மட்டுமல்ல..

இவ்வாயுள் முழுதும்

உறங்கிக்கிடப்பேன்..

உன் இதயத்துடிப்பின்

தாலாட்டில்..

## 9. காற்றோடு கதைக்கும்..

அடம்பிடித்து அசைந்தாடும்

பிள்ளையாய்..

அனுதினமும் அசைந்தாடி

தன்னை இடுப்பில் ஏற்றிக்கொள்ள

அழைக்கிறது..

சலசலக்கும் ஒலியோடு மரக்கிளைகள் ..

விண்ணில் தொலைத்த

தன் தாயை நோக்கியபடி..

# 10. நட்பு

அறிமுகம் ஏதுமின்றி அறிமுகம் ஆனோம்..

பல நாள் அறிமுகம் கொண்ட உணர்வு மனதில்..

அதிவிரைவில் நெருங்கிவிட்டோம்

ஒளியின் வேகத்தில் மனம்

இணைந்தும்..

சில நாள் சிரிப்பினில் மட்டுமன்றி..

உயிர் உள்ளவரை இணைந்திருப்போம்..

இரவும் இருளுமாய்..

## 11. விழித்திடு பெண்ணே..

மெல்லுடல் என்றே மறைத்திட பணிப்பர்

மறைத்துவிடு உடலை மட்டும்..

திறந்துவிடு எண்ணங்களை

இவ்வகிலம் காணட்டும்..

மெல்லினமென்றே உயிர்மெய்க்குள் அடைத்து வைப்பர்

உயிராய் அடைந்திடு மெய்யோடு..

உறவாய் அடைந்திடாதே

நாற்சுவரோடு..

வெண்ணிலவே தேனிலவே என்றேசெவி குளிர்ப்பர்

வெண்ணிலவு வெள்ளாடை கொண்டினும்

வைத்திருப்பர் காலமெல்லாம் இருளின் துணையோடு..

பனிமலரே பருவப்பூவே என்று தித்திப்பர்

மலரும் பூத்து சினுங்கிடும்

போதே

கொய்து கட்டிடுவர் கல்லறை மாலையொன்று..

தங்கமென்றே தகரப்பெட்டியில் அடைத்து

தினந்தினம் உரசிடுவர்..

100ஆக தேவியில்லை கண்ணே..

916போதும்..

விடுதலை என்றொரு சொல் வேண்டாம் உனக்கே..

விழித்திடு நீயும் தலைமேல் கொண்ட சிறை விடுத்தே..

# 12. இயற்கை மறந்த மனிதன்

அழிக்கும் சூத்திரங்கள்

ஆராய்ந்து அறிந்திடும்

இம்மனித வர்கத்திடம்

ஈகை வேண்டி..

உணவுக்கொடுத்து..

ஊர்தோறும் நிறைந்து அழிந்த நான்

எக்கணம் கேட்டிடுவேன்

ஏன் என்னைக் காக்க

மறந்தாயென..

## 13. கற்புக்கரசி..

எவரின் விரல் நுனி தீண்டியதோ?

தன் தலையை உரசி

தீக்கிரையாக்கி

மாய்ந்து போனாள்..

கற்புக்கரசி..

தீக்குச்சி..

## 14. வாழ்க்கை நிற்பதில்லை..

மண்ணில் ஓடும் நதியென்றும்

தடைகள் கண்டு நிற்பதில்லை

தடைகள் கண்டு நின்றுவிட்டால்

நதியும் கடலைச் சேர்வதில்லை..

வானில் தோன்றும் வெண்ணிலவும்

தேய்ந்திடாமல் இருப்பதில்லை

தேய்ந்து போன பிறைநிலவும்

மீண்டும் உதிக்க மறப்பதில்லை..

தூக்கியெறிந்த பின்னேதானே..

விதையும் மரமாய் முளைக்குதே..

# 15. சிசுக்கொலை..

நாளும் தள்ளிப்போனதடி..

நாலும் கெட்டுப்போனதடி..

சித்திரை வெயிலாய்

நித்திரை வேகுதடி..

அன்னந் தண்ணி சேரலடி

அனுதினமும் வதங்கி வாடி..

மாசமுன்னு மாமியாக்கிட்ட சொன்னா..

பெண்ணா இருந்திடுமோனு மருந்தரச்சுக் கொடுத்திருப்பா..

உன்னப்பனோ விருந்தும் வச்சிருப்பான்..

நீ பெட்டையென்றால் வாய்க்கரிசியும் போட்டிருப்பான்..

வேண்டாமடி இவ்வுலகம் நமக்கு

ஏந்தங்கமே..

வேறு ஜென்மமிருந்தால் ஆணாக பொறந்து வா..ஏஞ்சிங்கமே..

## 16. மறக்கப்படுகிறேன்..

சேயாக பிறந்த போது..

தாயவள் மார்பில் நிறைந்திருந்தேன்..

மழலையாய் மடி தவழ்ந்து

தந்தையவன் முதுகிலே சுமையாகிருந்தேன்..

பள்ளிச் சென்றுவந்த போது

பக்கம் அமர்ந்தேன்..

கரம் பிடித்தாடினேன்..

பருவம் எய்திய போது

முகம் பார்த்திடாது..

வெட்கத்தில் மறைந்திருந்தேன்..

கல்லூரிச் சென்று வந்த போது

மடந்தையென்று மறைக்கப்பட்டேன்..

இன்று ஒருவனின் மனைவியென்பதால்..

உயிராகிய உறவுகளால்

மறக்கப்பட்டேன்..

# 17. எல்லையற்ற அன்பு

என்றோ ஓர்நாள் வரும் வானவில்லிற்காக..

ஒருநாளும் திரைவிரிக்க மறப்பதில்லை..

வானம்..

# 18. வாழ்வியல்

இருபதில் இனிப்பது

நாற்பதில் சலிக்கும்..

இருபதில் கசப்பது

நாற்பதில் உரைக்கும்..

## 19. காலவதியான மனம்

நெருப்பும் மூழ்கச்செய்யும்

எரிமலை வெடிப்பின்

தீக்குழம்புகளாய்..

நீரும் எறியச்செய்யும்

வெள்ளமாய்,பேரலையாய்

மக்கள் வயிற்றை..

காற்றும் அதிரச்செய்யும்

புயலாய்,பூகம்பமாய்

உலகினை..

மனிதமனமும் வேலைச்செய்யும்

குடியாவும் மூழ்கியப்

# 20. நைய்யப்புடை

வீழ்வேன் என நினைத்தாயோ..

உன் இன்சொல் கேட்டு மடிசாய்வேன் என்றெதிர் பார்த்தாயோ..

தாழ்வேன் என நினைத்தாயோ..

உன்னில் பாதி என்பதால்

தாழ்ந்தவள் என்று

எண்ணினாயோ..

வேகம் கொண்டவன் நீயென்றால்

விவேகம் கொண்டவள் யாம்..

தரணி காண நீ கொண்ட கண்கள்

சிந்தும் கனலால் யாம் தரணி ஆள்வோம்..

# 21. நிதர்சனம்

உதிர்ந்து போன

பூக்களை நினைத்து..

ஒருபோதும்

செடிகள் மீண்டும்

பூக்காமல் இருப்பதில்லை..

# 22. இரவும் நிலவும்

எத்தனை இரவுகள்

தவமிருந்து தேய்ந்து போனாலும்

நிலவால் சூரியனைக்

காண்பது இயலாது..

## 23. மழையின் சோகம்

வாதமிட்ட மேகங்கள்

பிடிவாதம் கொண்டு..

மழைத்துளிகளாய்

கண்ணீர்விட்டு

நிலமோடு

சொல்லத் துடித்திடும்

சோகக்கதை தான்

யாரறிவாரோ..

# 24. பழந்தமிழர்

அறிவீரோய் ! இத்தரணி தாங்கும் அறிவுடையோரே..

அச்சமடம் மடந்தைக்குணமாம் ஆடவர்க்கு நிறைவீரமாம்

இச்சை மதியொழிப்பின் வாழ்வை ஈகைநிறைக்குமாம்

உச்சந்தலை குளிர்ந்திடுமாம் ஊரான்வரின் விருந்தோம்பலில்

எட்டாப்பகை விளைபோர்க்கும் ஏடெழுதிய நெறியுண்டாம்

ஐய்யனுடன் ஐவரெனில் ஐய்யவர்க்கும் வீடொன்றாம்

ஒற்றுமை போற்றும் உலகோ ரெல்லாம்

ஓதிவளரும் தாய்த் தமிழ்க் குறவாம்

ஔவை நெறியே தமிழனின் வழியாம்

## 25. காவியங்கள்..

நங்கைகளை போற்றிடும்

இச்சமுதாயம்..

(திரு)நங்கைகளை..

தூற்றுதல் ஏனோ..

கவிதைகள் இரசித்திடும்..

இவ்வுலகின் கண்களுக்கு

காவியங்கள் புலப்படுவதில்லை..

## 26. தொடரோட்டம்

சிறுமுள்ளுக்கும் பெருமுள்ளுக்கும்

இடையேயான

ஓடிப்பிடித்தல் ஆட்டத்தில்..
கடுகிலிருந்து கடலாகிப்போகிறது

உறவுகளின் நெருக்கம்..

# 27. காட்சி..ஒன்று

இடம்...புதிதாய் வாக்கப்பட்டு வந்த வீடு

கூற்று...தலைவி

வண்ணவண்ண வளையலிட்டு

வாழமரத்தோரனங்கட்டி

வந்து வாரங்க ளாகியதே

வாக்கப்பட்டு..

கண்ணீரில் தத்தளிக்கும்

தலைமகள் இவளுக்கோ

கலைக்கட்ட வேணுமாம்

தலைப்பொங்கலோ..

கடன்வாங்கிக் கட்டிக்கொடுத்த

அப்பன் கை காச்சுப்போச்சு

கண்ணீர் வெள்ளத்தில் கரைசேர்த்த

ஆத்தா குறுக்கு ஒடிஞ்சுப் போச்சு

கடமையிலே வெந்துப்போன வெள்ளந்திகளை

வெந்தணலில் மீண்டும் நான்

சீர்க்கேட்டு சேர்த்திடுவேனோ..

## 28. காட்சி....இரண்டு

இடம்.....ஆற்றங்கரை

கூற்று.....தலைவி

கண்கலங்கி கதியற்று ஆற்றங்கரையில் அமர்ந்திருக்க

ஓடிவரும் நதிநீரும் கால்கள் வருடி

காயமாற்ற முற்பட்டது..

விரல்நுனி தீண்டிய ஆத்துமண்ணோ

ஊத்துநீர் பரிசளித்தது..

சிறுபிள்ளை என்றெண்ணி..

அப்பன்கிட்ட சீர்கேட்க மனசாட்சி முன்வரல

ஆத்தா வீட்டுச்சங்கதி சொல்ல கௌரவமும் வழிவிடல..

பறவையாய் பறப்பவளை

சிறகாய் திசையற்று அலையச்செய்யும்

சீர்கெட்ட இச்சாத்திரக்களை யெல்லாம்

சிதைந்துதான் போனாலென்ன..

விதையற்ற களையும்

விதியாகிப்போவதன் பிழைதான் யாதோ..

# 29. காட்சி….மூன்று

இடம்.....ஆற்றங்கரை

கூற்று.....தலைவன்

நெடுநேரம் இலைபோட்டு மாமன் நான் காத்திருக்க

கண்கலங்கி இக்கரையிலே நீயும் தனித்திருக்கும்

காரணந்தான் யாதென சொல்வாயடி..

என் கண்மணியே என்று கரம்பிடித்தவன் கேட்க..

பெருக்கெடுத்து ஓடிவரும் கண்ணீர் வெள்ளத்தினை

அணைப்போட்டு நிறுத்தி

புன்னகைத் தீபமொன்று

இதழ்களில் ஏற்றி எழுந்துச்சென்றாள்..

காலில் ஒட்டிக்கொண்ட ஆற்றுமணலையும்

காரணங்கள் இல்லாத மனதின் ரணங்களையும்

பாரங்களாய் உடன் ஏந்திக்கொண்டு..

# 30. காட்சி…நான்கு

இடம்….. வீதி

கூற்று….ஆசிரியர்

யாதுமறியா மடந்தையவள்

கைப்பிடித்து நடந்தாள்..

கரம்பிடித்தான் கால்தடமே

விதி விதித்த வழியென்று..

கிளைத்தவறி ஆற்றில் வீழ்ந்த

இளமிலையும்..

நீரின் வழி செல்வதுபோல்..

தொப்புள் கொடி தாங்கிய பாரமினி

தாலிக்கொடித் தாங்கிடும் என்ற

## 31. காட்சி....ஐந்து

இடம்.....சீர் நிரும்பிய வீடு

கூற்று....தலைவி சிந்தனை.,தலைவன் ஆற்றல்

பட்டம் பெறாத ஊரானவன்

குற்றமில்லா கருங்காளையவன்

எட்டத்தூரம் போகவில்லை..

சிட்டிகையில் மாற்றிவிட்டான் சிட்டுப்போல..

வீடெங்கும் சீர்ப்பண்டங்கள்..

முத்துச்சிதறும் சிரிப்பொலிகள்..

வாய்ப்பொத்தி நின்றாள்

ஆனந்தம் கலந்த விழியோரக் கண்ணீரில்..

தாலிப்பில் தண்ணீராய்க் கேட்ட குரலும்

புல்லாங்குழல் நுழைந்த காற்றாகிப்போக

மகனில்லாக் குறை மருமகன் தீர்த்த

கர்வம் கண்டாள் தகப்பன் முகத்திலே..

நிகழ்வதறிய நின்றநிலையில்

ஒலித்தக் குரல்..

தந்தை செய்யும் சீரெல்லாம்

செய்திடும் உரிமை எமக்குண்டு

புரியாவிடில்..

நின்பெயரில் பார் உன்னப்பன் இருந்த இடத்தில்

இன்றிருப்பது யாரென...

என்றவன் மொழியில்

முத்தமாயிரம் மொத்தமாய் பெற்றவளானாள்..

ஆணாகினும் ஆணவமற்ற ஆண் நீ..

என்றே குறுநகைப் பூத்தாள்..

# 32. காற்றோடு நான்

காற்றின் மொழியறிந்து..

காற்றோடு கதைகள் பேசி..

காற்றோடு காதல்கொண்டு..

காற்றோடு கசிந்துருகி..

காற்றே காலை மாலையாய்..

காற்றே ஆதி அந்தியாய்..

காற்றோடு கலந்துவிட்டேன்..

உன் சுவாஸக்காற்று தீண்டும்

வரம் இல்லாததால்..

## 33. கருசிதைந்த தாய்..

முகம் பார்த்ததில்லை

மூச்சு பட்டதில்லை..

நகம் தீண்டியதில்லை

நீயென் நகலா கண்டதில்லை..

சரிப்பொலி கேட்டதில்லை

சுமை கூட தாங்கியதில்லை..

மழை முன் எழும் மண்வாசமாய்

என்னுள் உதித்ததை உணர்ந்தேன்..

உன்னை வயிற்றில் சுமக்க தவறினும்..

என்நெஞ்சில் என்றும் உன்னை

சுமப்பேன்..

என் தங்கமே..

## 34. ஆனந்தம் ஆனந்தம்..

செடியில் பூக்கும் பூவெல்லாம்

செடியின் பூக்கள் கிடையாது

செடியில் பூக்கள் தங்கிவிட்டால்

பழமும் இங்குக் கிடையாது..

குறைகள் காணும் கண்களுக்கு

நிறைகள் என்றும் தெரியாது

நிறைகள் தேடிக் கண்டுவிட்டால்

குறையும் குறையே கிடையாது..

மூச்சென்று ஸ்வாசித்த காற்றும்

மூக்குக் சொந்தங்கள் இல்லை..

நிழல் வந்து தீண்டியபோதும்

நினைவுக்கு வண்ணங்கள் இல்லை..

பார்த்து ரசிக்கும் பிம்பங்களெல்லாம்

உயிர்தான் பெற்று வாழுமா..

# 35. பயிர்மைந்தன்

உலகிற்கு உணவளித்திட

உள்ளூர் வங்கியில்

கடன் பெற்று..

கயிற்றில் வாழ்க்கை முடித்த

கடவுள் உருவமான பயிர்மைந்தனே..

தெரிந்துகொள்..

கடன் கூட

அதிகம் பெற்றால் தான்..

உலகம் மதிக்கும்..

# 36. தெம்மாங்கு கேட்டிடு..

நித்தம் நித்தம் சுழலும் இப்பூமிப்பந்தில்

சுற்றிச்சுற்றி ஓடுகிறோம்

கடிகார முற்களாய்..

முதலறியா முடிவறியா எதற்கு இத்தொடரோட்டம்..

இச்சிறுசக்கரத்தினுள்ளே..

## 37. பணம் என்னும் உயிரில்லா காகிதத்திற்காகவா?...

*ஆயிரமாயிரம் காகிதமும்*

*அங்கங்கு கிடந்தது குப்பையில் ஓரிரவில்*

*அதற்கா இத்தனை தாகம்?*

## 38. பார் போற்றும் பெயருக்காகவோ?...

போகம் பெயர் கொண்டதால் மட்டும்

தப்பிவிட்டாரா வருமானவரித்துறையிடம்

நம்மை நெஞ்சில் குடிவைத்த அண்ணரும்..

## 39. பார்த்து வியந்த பெண்ணிற்காகவோ?..

பொத்தி பொத்தி பாதுகாத்த

உன் தேகமே ஒருநாள் மாய்ந்திடுமெனில்

இன்னொருவளின் தேகமோகம் எதற்கு?

ஒட்டம் வேண்டாமடா ஒற்றை வாழ்வினிலே..

சிட்டும் பறந்திடுமடா சிட்டிகை சிறகினிலே..

மெல்லநடை போட்டிடு மெல்லிடையோடு..

தெம்மாங்கும் கேட்டிடு தேம்பாவணியென்று..

## 40. பள்ளியோடு தொலைந்த உறவு

விழிகள் நெடுந்தொலைவில்..

விரல்கள் பெரும்பிரிவில்..

நிழல்கள் நெடுந்தொலைவில்..

வலிகள் துணை கனவில்..

வாரக்காலம் பிரிவு பொறுத்திடாமல்

கண்ணீர் கொண்டோம்..

இப்பெரும் பிரிவினை மட்டும் விரும்பி ஏற்றோம் எதற்கு..

எத்தனை எத்தனை கதைகள்

ஓயாமல் கதைத்திருப்போம்..

இன்று குறளளவு கவிதைகளிலும்

மௌனங்கள் நிறையுதடி..

நான் அமர்ந்த உன்மடி வேண்டும்

நீயிட்ட முத்தங்களின் எச்சில் கேட்குதடி..

தினம் சென்ற வழியெல்லாம்

நான் மட்டும் உலாவருகிறேன்..

என்னவளே நீயுமெங்கே..

திருமணம் செய்துகொண்டோம்

நினைவிருக்கா?

கைபிடித்த என்னையும் விவாகரத்து

இன்றி விட்டுச்சென்றாயோ..

நட்பென்றால் அன்றோடு முடிந்திருக்கும்..

நட்பை தாண்டி..கலந்துவிட்டு..

இன்றுன்னை மறப்பது எளிதல்ல..

வானமாய் என் வாழ்வில் நீயிருக்க..

மேகமாய் என்னை நினைத்தாயோ உன் வாழ்வில்..

எத்தனை காலம் ஆனாலும்..

என்னுள் நிறைந்திருப்பாய் நீ..

என்னவளே..

## 41. விதை

நேற்று காற்றோடு போகட்டும்..

நாளை புதிதாய் விடியட்டும்..

தோல்விகள் யாவும்

உரமாகட்டும்..

நாளை வெற்றிக்கு..

இன்றைய நாளே

விதையாகட்டும்..

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஒர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும்,

சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் *Creative Commons* எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி

நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச்

செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

***FREETAMILEBOOKS.COM***

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

*PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT*

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(*download*) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(*download*) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை

எடுத்து, அவற்றை *LibreOffice/MS Office* போன்ற *wordprocessor*-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை *"Creative Commons"* உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் *freetamilebooksteam@gmail.com* எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப்

பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து *ebook reader* போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் *tablets* மற்றும் *ebook readers* போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. *http://www.vinavu.com*
2. *http://www.badriseshadri.in*
3. *http://maattru.com*

4. *http://kaniyam.com*

5. *http://blog.ravidreams.net*

**எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with an-

*droid, iOS* போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் *support* செய்யும் *odt, pdf, ebub, azw* போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை *"Creative Commons"* உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

*http://creativecommons.org/licenses/*

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

*e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM*

*FB : https://www.facebook.com/FreeTamilEbooks*

*G plus: https://plus.google.com/communities/108817760492177970948*

நன்றி.

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் *"Creative Commons License"*-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலை*FREETAMILEBOOK-STEAM@GMAIL.COM* எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

*அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.*

*ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.*

*அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.*

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

*ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.*

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- *EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM*
- *Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks*
- *Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948*




**தொலை நோக்கு – *Vision***

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – *Mission***

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப,

*தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.*

### தற்போதைய செயல்கள்

- *கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/*
- *கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com*

### கட்டற்ற மென்பொருட்கள்

- *உரை ஒலி மாற்றி – Text to Speech*
- *எழுத்துணரி – Optical Character Recognition*
- *விக்கிமூலத்துக்கான எழுத்துணரி*
- *மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle*

* விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
* மின்னூல்கள் உருவாக்கும் கருவி
* உரை ஒலி மாற்றி – இணைய செயலி
* சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
* *FreeTamilEbooks* – ஆன்டிராய்டு செயலி
* *FreeTamilEbooks* – ஐஓஎஸ் செயலி
* *WikisourceEbooksReport*இந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
* *FreeTamilEbooks.com – Download counter* மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

## அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்

- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி

*உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)*

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும்

மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், *GNU GPL, Apache, BSD, MIT, Mozilla* ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

***Kaniyam Foundation***

***Account Number : 606 1010 100 502 79***

***Union Bank Of India***

***West Tambaram, Chennai***

***IFSC – UBIN0560618***

***Account Type : Current Account***




BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: *சில UPI செயலிகளில் இந்த QR Code* வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், *IFSC code* ஐ பயன்படுத்தவும்.

*Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.*